# தென்மொழி? 

Actually title reads:

# கொங்கு

திங்கள் இதழ்

ஆசிரியர்: புலவர் செ. இராசு

ஆடி 2002 ] 25 காசு [ ஜூலை 1971



சாலைப் பாதுகாப்பு வாரம்
அண்மையில் கொண்டாடப்பட்டது.

அறிவியல் வரலாற்றுத் திங்களிதழ்

# கொங்கு

சேவலங் கொடியோன் காப்ப
ஏமவைகல் எய்தின் ருல்உலகே.

தேவடை 1 (15-7-71) தேனீ 7


## வணக்கம்

சென்ற இதழ் மலராக மணந்ததைப் பாராட்டிப் பல கடிதங்கள் வந்துள்ளன. கல்வெட்டு, கல்வெட்டு என்று மலர் முழுவதும் கல்வெட்டாக இருந்ததையும் சிலரால் பொருத்துக் கொள்ள இயலவில்லை. இருசாராருக்கும் நன்றி.

இந்த இதழில் குழந்தை மருத்துவத்தில் ஒரு கட்டுரை இடம் பெற்றுள்ளது. மகளிர் மன்றங்கள் பலவற்றிற்கு கொங்கு பரவியுள்ளதால், அவர்களுக்கு இக்கட்டுரை பயனுள்ளதாக இருக்கும். மலைகள் தொடர் கட்டுரையும் இந்த இதழில் முடிகிறது.

கொங்கு இதழ் படித்தபின், சேர்த்து வைக்க வேண்டிய ஒன்ருகும். ஒவ்வொரு ஆண்டும் அவற்றைத் தொகுத்து ஒரு நூலாகத் தைத்துக் கட்டடம்செய்து வைத்துக் கொள்ளலாம். அதனலேயே என்றும் மதிப்புடன் நிற்கும் சிறந்த கட்டுரைகளைத் தேடி வெளியிடுகிறோம். பக்க எண்களும் தொடராக இடுகிறோம்.

உங்கள் கருத்துக்களை அடிக்கடி எழுதுங்கள். நல்ல மாற்றங்கள் செய்து பலருக்கும் பயன்படும் வகையில் வெளிக் கொணர விரும்புகிறோம்.

வங்காள தேசச் செய்திகள், காவேரி நீர்ப் பங்கீடு, மது விலக்கு ஒத்தி வைப்பு, இந்திப் பிரச்சினையில் சமரசம், கிருஷ்ண கிரி தேர்தல், கல்லூரிச் சேர்க்கைகள் போன்ற பல செய்திகள் அன்ருடப் பேச்சுக்கு அடிப்படையாக அமைகின்றன. எது எப்படி இருந்தாலும் நேரம் மட்டும் ஓடிக்கொண்டேயிருக்கிறது. நாமும் நமது பணியினைத் தொடருவோம்.

— ஆசிரியர்.

# அணுவின் கதிரியக்க விந்தைகள்

அ. இரா. இராம அரசு M. Sc., D. S. S.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே உலகு" என்பது திருவள்ளுவர் வாக்கு. "அணு முதற்றே உலகு" என்பது இவ்வணு யுகத்தின் வாக்காகும். அணுவை நம்பியே உலகம் நடக்கின்றது என்றால் மிகையாகாது. இவ்வண்டத்திற்கு அடிப்படையானது அணுவே யாகும். வளர்ந்து வரும் உலகிற்கு அணு ஆற்றல் ஒரு வரப்பொருளாகும். மேலும் கதிரியக்க அணுக்கள் விவசாயிகளின் துணைவனாகவும், கடவுளாகவும், ஏன்? சேவகனாகவும் சேவை புரிகின்றன. விவசாயத்துறையில் பல விந்தைகளை அறிவியலர் புகுத்தியுள்ளார்கள்.

பயிர்களைத் தாக்கும் பூச்சிகளின் தொல்லைகளை ஒழிக்க அணுவின் செயல் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும் கறவைகளின் பால்கறக்கும் திறனைக் கண்டறிய உதவுகின்றது. கதிரியக்க அணுக்களை பசுக்களின் உடலினுட் செலுத்தி அது செல்லும் பாதையை கண்காணித்து கெய்கர் எண்ணு கருவிமூலம் (Geiger counter) கணக்கிட்டு பல புதிய விந்தைகளைக் கண்டுள்ளார். இத்துறையில் ஓக் ரிட்ஜ் (Oak Ridge) இல் உள்ள அமெரிக்க விவசாய ஆய்வுக் கூடத்தில் எண்ணற்ற அடிப்படை ஆய்வுகள் நடத்தப்பட்டு உண்மைகள் வெளியிடப்பட்டுள்ளன.

இக்கதிரியக்க அணுக்கள் விலங்குகளின் வாழ்க்கை இரகசியத்தை வெளிப்படுத்தும் கருவியாகவும், கதிரியக்க கதிர்



கட்டுரை ஆசிரியர் பெரிய நாயக்கன் பாளையம், கிராமீயக் கல்லூரியில் இயல்பியப் பேராசிரியராகப் பணியாற்றுகிறார்.

களுக்கு இருப்பிடமாகவும் இருக்கிறது. அவ்விலங்குகள் உண்ணும் உணவு, தாவரங்களின் சத்து ஆகியவற்றைப் பற்றியும் அறிய முடியும்.

பன்றி, ஆடு, மாடு, ஆகியவைகளுக்கு சத்துணவு கிடைத்தால் சிறந்த பன்றி இறைச்சி, மாட்டு இறைச்சி, சிறந்த உரோமக்-கம்பளி ஆகியவைகள் மனிதனுக்குக் கிடைக்கும். இதற்காகவே பல சிறந்த பண்ணைகளை மேற்சொன்ன விவசாயக் கூடம் நடத்தி வருகிறது.

விலங்குகளும் மனிதர்களைப் போன்றே உணவு வகைகளில் விருப்பு வெறுப்பு காட்டும் தன்மையையுடையன. தான் செறிக்கும் திறனுக்கேற்ற உணவு வகைகளையே விலங்குகள் விரும்பி உண்ணும். விலங்குகளின் செறிக்கும் திறனைக் கண்டறிய கதிரியக்க அணுக்களை அவைகளின் உணவில் கலந்து ஊட்டி மிகத் துல்லியமாக அவைகளின் திறனைக் கண்டறிகிறார்கள்.

கன்றுக் குட்டிகளின் வளர்ச்சி அவைகளின் தைராய்டு ( Thyroid ) சுரப்பியின் செயல் திறனில் மறைந்துள்ளது. சுரப்பியை ஊக்கு வித்தால் கன்று பசுவாகி பலன் விரைவில் கிட்டும். மேலும் பசுவின் பால் கறக்கும் திறனைக் கண்டறிய கதிரியக்க அயோடினை ( Iodine ) உணவில் சேர்த்து ஊட்டிக்கண் காணித்து அறியலாம்.

"ஆள் பாதி ஆடை பாதி" "ஆடை யில்லாதவன் அரை மனிதன்" "கந்தை யானாலும் கசக்கிக் கட்டு" என்ற பழமொழிகள் ஆடையின் அவசியத்தை வலியுறுத்துகின்றன. இதற்கு அடிப்படை நூல்தான். இவைகளை பருத்திச் செடி மூலம் பெற்று வருகிறோம். அவைகளைவிட செயற்கை நூல்களைக் கொண்டு செயற்கை துணிகளை நெய்துள்ளார்கள். ஆனாலும் பருத்தி ஆடையில் அளப்பரிய பயன்கள் உள்ளன. அவைகளுக்கு சிறந்த வரவேற்பு எல்லா இடங்களிலும் எல்லா நேரங்களிலும் உண்டு.

பருத்தியில் அமெரிக்க ரகம், எகிப்திய ரகம் என்பன முக்கியமானவை. இவை யிரண்டும் தனித்தனியே பல சிறப்பியல்புகளைக் கொண்டவைகளாகும். இவையிரண்டையும் கலந்து ஒரு புதிய கலப்பினப் பருத்தியை தயாரிக்க பல்லாண்டு காலமாக இடைவிடாத ஆய்வு நடை பெற்றுவருகிறது. இப்பெரு முயற்சியால் கதிரியக்க அணுக்களின் செயல் ஒரு விந்தையான செயலாக இருக்கும். இவை யிரண்டும் கலந்த புதிய ரகம் தனித் தன்மையுடையதாக பாலும் தேனும் கலந்தாற் போல் இருக்கும்.

அணுவின் பயன் அளவிடற்கரியது. ஆற்றல் தரும் பெருங் கடல். எல்லாத் துறைகளிலும் அதன் புழக்கம் பெருகி வருகின்றது. விரைவில் "அணுவின்றி ஓர்துறையும் விளங்காது" என்ற நிலை வந்து கொண்டிருக்கின்றது.

*

# நுட்பச் சொல் ஆணையம்

அறிவியலைத் தமிழில் எழுதும் போது, புதிய சொல்லமைப்பில் இடர் ஏற்படுவதுண்டு. சொற்களால் ஏற்படும் இடரை விட அதைப் படித்து ஏற்றுக் கொள்ளும் மக்களின் மனப் போக்கால் வரும் இடர், அதிகம்.

சொற்கள் தனி, அவற்றின் பொருள் தனி, சொற்கள் சிறியதாக, எளிதில் ஒலிக்கக் கூடியதாக, இணையான சொற்களிலிருந்து வேறுபட்டு நிற்கும் வகையில் இருக்கவேண்டும். அவையே நுட்பச் சொல் என்கிறோம். சான்றாக geology — புவியியல் geography — புவிவரையம், (அல்லது) பூகோளம். தற்போது பள்ளிகளில் புவியல் (geology) என்ற தலைப்பில் பூகோளம் (geography) சொல்லிக் கொடுக்கப் படுகிறது. நல்ல சொற்களை ஆராய்ந்து நிலைவு செய்தால் இம் மயக்கம் குறையும். அதனால் புதிதாகத் தோன்றும் சொற்களை நுணுகி ஆராய்ந்து பரிந்துரை செய்ய ஐவர் கொண்ட ஒரு நுட்பச் சொல் ஆணையம் ( Technical Terms commission ) அமைக்க "கொங்கு" விரும்பியது.

எங்கள் விருப்பத்தை ஏற்றுக் கொண்டு ஆணையத் தலைமைப் பொறுப்பேற்க இசைவு அளித்த சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. K. S. மகாதேவன் B. Sc., M. A., அவர்களுக்கு கொங்கு தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது. ஆணையத்தின் பிற உறுப்பினர் பெயர்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

ஆராய்ந்து, தேர்ந்தெடுக்கும் " நுட்பச் சொற்றொகை" ஒவ்வொரு கொங்கு இதழிலும் வெளிவரும்.

— ஆசிரியர்.

---

ஊரும் பேரும்

மன்னர்களும் அவர்கள் குடும்பத்தினரும் நன்கொடைகள் வழங்கும் ஊர்களுக்கும், கொடையாக வழங்கும் ஊர்களுக்கும் தம் பெயரைச் சூட்டி விடுவது பழக்கமாக இருந்தது. அதில் முன்னணியில் நிற்பவர் சோழர்களாவர். கல்வெட்டுகளிலிருந்து இதை அறிந்து கொள்கிறோம். தென்னாற்காடு மாவட்டததில் சிதம்பரம் தாலூகாவில் அவ்வாறு பெயர் பெற்ற ஊர்கள் சில.

| | |
|---|---|
| அக்கராமங்கலம் | திருவம்பலப் பெரும் பள்ளி நல்லூர் |
| கொப்பாடி | கணபதி நல்லூர் |
| முட்டலூர் (முட்டையூறல்) | பராக்கிரம சோழ நல்லூர் |
| கடவாச்சேரி | தில்லை நாயக நல்லூர் |
| சொத்தங்குடி (கொற்றக்குடி) | பவித்திர மாணிக்க நல்லூர் |
| மீதுக்குடி (மிதுனக்குடி) | தானவினோத நல்லூர் |
| ஆலம்பாடி | குலோத்துங்க சோழ நல்லூர் |
| குமாரமங்கலம் | தில்லை அழகநல்லூர் |

நடன. காசிநாதன். M. A.

# மலைகள்

க. மணிமேகலை M.A.,B.Sc.,

## மலைகளின் பயன்கள்

மலைகளின் பயன்கள் எண்ணிலடங்கா; மலைகளை உலகு வாழ் மக்களின் உயிர்நாடி என்றும் இயம்பலாம். ஏனெனில் பருவக் காற்றில்லையேல் மழை இல்லை. மழை இல்லையேல் பயிரில்லை. பயிரில்லையேல் மனித வாழ்க்கை நிலைபெருது. உயர்ந்து நிற்கும் மலைகள் தன் மருங்கே வரும் பருவக்காற்றினைத் தடுத்து நிறுத்துவதால், அம்மலைப் பகுதிகளிலும், அடிவாரங்களிலும் பெருமழை பொழிகிறது. இதற்குச் சான்ருக இந்தியாவின் மேற்கு கடற்கரைப் பகுதியைக் கூறலாம். மேற்கு தொடர்ச்சி மலைகள் (western ghats) மேற்கிலிருந்து வரும் பருவக் காற்றைத் தடுத்து நிறுத்தி மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் பொழியச் செய்கின்றன. பெரும்பான்மையான மலைப்பகுதிகள் மிகுந்த மழை பெறுகின்றன. இந்தியாவில் அச்சாமிய (Assam) மலைப்பகுதியில் சிரபுஞ்சி என்னுமிடம் ஆண்டொன்றிற்கு 400 அங்குல மழையைப் பெறுகின்றது. இதுவே உலகின் பெரும (Maximum) மழை பெறும் இடமாகும்.

கற்கால மனிதனின் பிறப்பிடம் மலைக்குகைகளே யாகும். இன்றும் மலைக் குகைகள் உலகில் சில இடங்களில் கற்கால மனிதன் வாழ்ந்ததற்குச் சான்று பகர்கின்றன. இதனைவிட அன்றும் இன்றும் இம்மலைக் குகைகள் காட்டு விலங்குகட்கு இருப்பிடமாக விளங்குகின்றன.

அடுத்து மலைப்பகுதிகள் எப்பொழுதும் மட்டான வெப்பத்தையே பெறுகின்றன. கடல் மட்டத்தினின்று உயரே போகப் போக வெப்பம் குறைந்து கொண்டே போவதால் மலை நாடுகள் மனித இனம் வாழ ஏற்றதாகவும், உடல் நிலை குன்றியவர்கட்கு ஏற்ற இடமாகவும் (Health resort) விளங்குகின்றன. சிம்லா, டார்சிலிங்கு (Darjeeling) டேராடூன் (Dehradun), உதகை (Ootacamund) கொடைக்கானல், ஏற்காடு, போன்ற மலை நகரங்களைத் தக்க சான்றுகளாகக் கூறலாம்.

மலை தரும் பொருட்கள் எண்ணிலடங்கா. உருளைக்கிழங்கு, காப்பி, தேயிலை, பலவகைக் பழங்கள் முதலியன விளைபொருட்களில் குறிப்பிடத்தக்கன. காடுகள் சிறந்து வளருகின்றன.

காட்டு மரங்கள், தேக்கு முதலியவற்றின் பயன்கள் பலதரப் பட்டவை. மரங்களிலிருந்து, தேன், அரக்கு சிலவகைக் கோந்து கள் கிடைக்கின்ன.

இரும்பு, செம்பு, பொன், வெள்ளி ஈயம் போன்ற கனிவளங் களும், கந்தகம், நைட்ரசன், பொட்டாசியம், பாஸ்பேட், போன்ற பலவகை உப்பு வகைகளும், கல்நார், சிப்சம், மைகா போன்ற பயன்படு பொருட்களும் தோண்டத் தோண்டத் தருவது மலைகளே. இந்திய புவியியல் அளவைக் கழகம் (geological Survey of India) பல மலைச்செல்வங்கள் கிடைக்கும் மலை களையும் அவற்றின் அளவுகளையும் ஆராய்ந்து கொண்டே இருக்கின்றது.

மலை மனிதர்களைப் பிரித்து விடுகின்றது. அதே நேரத்தில் ஒவ்வொரு நாட்டின் எல்லைகளாகவும், காக்கும் அரண்களாகவும் இம்மலைகள் திகழ்கின்றன. மலைகள் இரு நாடுகளின் சுவர்கள் போலிருப்பதால் மனிதர்களிடையே நல்ல உறவு தடைபட்டு பழக்க வழக்கங்கள் மாறி வேறுபட்டுக் காணப்படுகின்றன. தென் அமெரிக்காவில் சிலியும் அர்செண்டைனாவும், ஐரோப்பாவில் ஆத்திரியாவும் இத்தாலியும் ஆசியாவில் இந்தியாவும் சீனாவும் மலைகளால் பிரிக்கப்படுகின்றன.

---

## விண்வெளியர் மூவர்

''சோயுஸ்'' என்ற ரசிய விண்வெளிக்கலம், வியத்தகு சாத னைக்குப் பின் ஒரு பெருஞ் சோகச் செய்தியுடன் மெதுவாகத் தரையிறங்கியது. விண் வெளியில் நிலையான ஆய்வுக் கூடம் அமைக்கும் பணிக்கான சோதனைகள் பல புரிந்து விட்டு 24 நாட் கள் எடையற்ற நிலையில் வான வெளியில் உயிர் வாழ்ந்து திருப் பிய விண்வெளியர் ஜார்ஜி டோப்ரோவோஸ்கி 43) விளாடிஸ் லாவ் வால்காவ் (37) விக்டர் பாட்சேயேவ் (38) உயிரிழந்து காணப்பட்டனர்.

அறிவியல் ஆய்வுப் பணிக்காக இன்னுயிரிழந்த வீரர்களுக்கு வணக்கம் செலுத்துகிறோம்.

இறப்பிற்கான காரணம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை விரைவாக நடந்து கொண்டிருந்த ஆய்வுப் பணியில் இது ஒரு சுணக்கத்தை ஏற்படுத்தும். எனினும் அறிவுப் பணிதொடரும். விண்வெளி வெற்றியின் வரலாற்றில் உயிரிழந்த வீரர்களுக்கு தனி இடம் உண்டு.

— ஆசிரியர்.

---

மலையில் வாழ்வது நன்மை பயப்பதே ஆனால் மலை வாழ் மக்கட் தொகை குறைவே மலைகளில் வாழும் இக்குறைந்த மக்கள் இன்னும் மலைஇனத்தினர் என்றே அழைக்கப்படுகின்றனர். சமவெளிப் பகுதிகளைப் போல் மலை நாடுகள் இன்றியமையாத வசதிகளைப் (Modern Amenities) பெறாததால் மலைவாழ் மக்கள் இன்னும் நாகரீகமடையவில்லை யென்றே கூறலாம். ஆனால் சுவிட்சர்லாந்து, நார்வே, ரசியா, சப்பான் ஆகிய நாடுகள் மலைகளை மிகுதியாகப் பெற்றிருப்பினும் மக்களின் விடாமுயற்சியாலும், அறிவியல் வளர்ச்சியாலும், உயர்ந்த நாகரிக நிலையை அடைந்துள்ளனர்.

நாடா கொன்றோ; காடா கொன்றோ
அவலா கொன்றோ; மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை; வாழிய நிலனே!

என ஔவையார் பாடிச் சென்றது எக்காலத்திற்கும் பொருந்தும்.

---

*இக்கட்டுரை ஆசிரியை "பாரிபதிப்பகத்தின் உரிமையாளர் ஆவார். பொறியியல், நுட்பவியல் கல்லூரிகளுக்கான பாட நூற்கள் சில வெளியிட்டுள்ளார்.*



ஐம்பத்தி இரண்டில் அடியெடுத்து வைக்கும் மாண்புமிகு கல்வி அமைச்சர் **நாவலர்** அவர்களுக்குப் பிறந்த நாள் வாழ்த்துக் கூறிப் பெருமையடைகிறது **கொங்கு**

# ஆயிரத்தெண்ணூறில் தமிழகம்

## புக்கானன்

### சத்திய மங்கலம்

### 21. அக்டோபர் 1800

இன்று மூன்று மணி தூரம் பயணம் சென்று சத்தியமங்கலம் சேர்ந்தேன். சத்தியமங்கலம் என்ருல் சமஸ்கிருதத்தில் முற்றிலும் நல்லது (truely good) என்று பொருள். இங்குள்ள கோட்டை மிகவும் பெரியது. பெரும்பெரும் கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளது, இங்கு ஒரு காவல் படை உண்டு, ஆனல் குதிரைகளின் எண்ணிக்கை மிகவும் குறைவு. மதுரை அரசரின் சார்பில், இந்தப் பகுதியை ஆட்சி செய்த திருமலை நாயக்கர் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன் இதைக் கட்டினராம். இங்குள்ள வணிகர்கள் தான் கொஞ்சம் வரலாறு தெரிந்திருக்கிருர்கள். அவர்களின் கூற்றுப்படி ஐம்பதாண்டுகளுக்குப் பின் இது மைசூர் கண்டீரவ நரச ராஜா அவர்கள் வசம் ஆயிற்று, இது சேரதேசத்தின் ஒரு பகுதி; மக்கள் தமிழ் பேசுகிருர்கள். முன்னளில் இலங்கை மன்னன் இராவணன் ஆட்சியிலும் பின்னர் பாண்டியர் ஆட்சியிலும் அடங்கியிருந்ததாம்.

ஐதர் காலத்தில் சுமார் 784 வீடுகள் கோட்டைக்கும் சற்று தூரத்தில் இருந்தது, இப்போது 536 ஆகக் குறைந்து விட்டது. இங்கு விஷ்ணு கோயில் உள்ளது. இதன் தேர் என்ற ரதம் மிகவும் பெரியது; கலை வேலைப்பாடு மிகுந்தது. அந்தக் கடவுளின், கிருஷ்ணவதாரக் காட்சிகள் இதுவரை நான் பார்த்தவைகளிலேயே மிகவும் அநாகரீகமாகச் செதுக்கப்பட்டிருந்தன.

இங்குள்ள ஆற்று மணலில் இரும்புத் தாது கலந்திருக்கிறது. அதை உருக்க, ஏழு மலபார் மணிப் பயண தூரத்தில் ஓர் இரும்பு உலை இருக்கிறதாம்.

(சத்தியமங்கலத்தில் அடுத்த நாளும் இருந்து மேலும் பல செய்திகளைத் திரட்டுகிருர். காட்டு மரங்கள் பலவற்றின் மாதிரிகளைச் சேகரித்துக் கொள்கிருர், பலவகைத் துணி நெய்யும் ஜேடர்களைச் சந்திக்கிருர். தேவாங்க தெலுங்கர் களைச் சந்திக்கிருர், அவர்களுடைய பழக்க வழக்கங்களை

அறிந்து கொள்கிறார். பிறகு இருபத்தி மூன்றாம் தேதி முடுக்கன்துறை சென்று தங்கிவிட்டு அடுத்த நாள் பயணம் தொடருகிறார்.)

## டணாய்க்கன் கோட்டை

## 24. அக்டோபர் 1800

ஐந்து மலபார் மணி தூரம் சென்று, மோயார் கலக்குமிடத்திற்கு மேலே பவானியின் வடகரையில் அமைந்துள்ள டணாய்க்கன் கோட்டையை அடைந்தேன். இங்குள்ள கோட்டையில் ஐம்பது வீடுகள் தான் உள்ளதாகச் சொல்லப்படுகிறது, ஆனால் மிகவும் பெரியது. சுற்றுவட்டாரத்தில் 107 வீடுகள் உள்ளனவாம்.

மதுரை சார்ந்த பாளையக்காரர் தனநாயக்கர் இந்தக் கோட்டையைக் கட்டியதாகச் சொல்லப்படுகிறது. பல கை மாறிய பின் மைசூர் ஆட்சியில் வந்துவிட்டது, இங்குள்ளவர்கள் கன்னடம் பேசுகிறார்கள்.

மலைமேல் வசிக்கும் படகர் என்போர் தேனும் மெழுகும் சேகரித்து கொண்டு வருகின்றனர். "ஏரலிகரு" மலைமேல் வசிக்கின்றனர்.

## 25. அக்டோபர் 1800

இன்று டணாய்க்கன் கோட்டையிலேயே தங்கி, நீண்டதூரம் மேற்கு மலைமேல் ஏறி "எரிலிகரு" வை அடைந்தேன். இங்கு நான் கேள்விப்பட்டது இயற்கையின் அதிசயிக்கத் தக்க அன்பிற்குச் சான்றாகும். இங்குள்ள ஏழை மக்கள் முற்றும் ஆடைகளே இல்லாது நடமாடுவதாகவும் மரத்தடியில் தூங்குவதாகவும், வெம்புலிகள் தம்மை ஒன்றும் செய்யாதவாறு மயக்கும் ஆற்றல் உடையதாகவும் கேள்விப்பட்டேன். ஏரிலிகரு பெண்கள் எவ்வாறு தம் குழந்தைகளை புலியின் பாதுகாப்பில் விட்டு விட்டு விறகு பொருக்கச் செல்கிறார்கள் என்பதை என் மொழிபெயர்ப்பாளர் உருக்கமாக விவரித்தார்.

ஏரிலிகரு மேல் ஒரு சிறு கிராமம் இருந்தது. ஏழெட்டு குடிசைகளும் ஆட்டுத்தொழுவமும் இருந்தன. இவை ஒரு சதுரப் பரப்பைச் சுற்றி இருந்தன. இங்கு இரவில் தீ மூட்டி புலிகள் வராமல் காக்கிறார்கள். குடிசைகள் மூங்கில் சிப்பங்களால் கூடை முடைவது போல பின்னப்பட்டு, சிறியதாகவும் சுத்தமாகவும்

இருந்தன. கோழி, ஆடு, பசு வளர்க்கின்றனர். பசு பால் தர மட்டுமே பயன் படுகிறது. உழவுக்குப் பயன்படுவதில்லை.

குட்டுக்காட்டு முறையில் காடுவளர்த்துப் பிழைக்கின்றனர். மூங்கில், எலுமிச்சை போன்றவை வளர்க்கின்றனர்.

மலைமேல் நின்று பவானி ஆற்றுப் படுகையின் அழகைக் கண்டேன். சங்கரிதுர்க்கம் வரை மலைகள் நீண்டு விரிந்த சேர நாட்டைக் கண்டேன். ஊருக்குப் பக்கத்தில் அருமையான நன்னீர் ஊற்றின் நீர் அருந்திப் புத்துணர்வு பெற்றேன்.

சிறுமுகை

26 அக்டோபர் 1800

இன்று அரை மலபார் மணிதூரம் சென்று சிறுமுகையை அடைந்தேன். பவானியின் கரைமேல் உள்ளது. நீர் தெளிந்து ஓடுகிறது. ஆற்றங்கரை ஓரமே விவசாயம் நடக்கிறது. சிறுமுகை ஒரு ஏழைக் கிராமம். சுமார் 20 வீடுகள் மட்டும் உள்ளன. அபூர்வமாக சில கடைகளும் உள்ளன; சுல்தான் ஆட்சிக்காலத்தில் இங்கு கோயம் புத்தூர் அசோபை (Asoph)ச் சேர்ந்த அமில்தார் வாழ்ந்த இடம். இங்கு மழை இல்லை,

---

**மைசூரும் காவேரியும்**

காவிரியில் புதிய அணைகள் கட்டி, நியாயமாகத் தமிழகத்திற்கு வரவேண்டிய நீரைத் தடுக்கிறது மைசூர். ஆற்றின் மேல்பகுதியில் இருப்பவர்கள், ஏற்கனவே கீழ்ப்பகுதியில் பயன்படுத்திக் கொண்டு வந்த அளவுக்குத் தண்ணீரைத் தந்துவிட்டு, எஞ்சியதைத் தான் தேக்கவேண்டும். அதுதான் முறை. பெருமழை வந்து, வெள்ளப் பெருக்கு ஏற்படும் போது, ஏற்படும் சேதங்களைத் தமிழகமே பொறுத்துக் கொள்ள வேண்டியுள்ளது. அப்போது எல்லா நீரையும் மைசூரில் பிடித்து வைத்துக்கொள்ள முடியுமா ?

நாடுகளுக்கிடையே இதுபோன்ற தண்ணீர் தகராறு அடிக்கடி வருவதுண்டு. ஒட்டக் கூத்தர் அத்தகைய நிகழ்ச்சி ஒன்றைத் தன் "மூவருலா" வில் குறிப்பிடுகிறார். அவர்காலம் பத்தாம் நூற்றாண்டு. அவர் காலத்திற்கு முந்திய மைசூர் மன்னன் அணை கட்டிக் காவிரி நீரைத் தேக்கியபோது, சோழ மன்னன் படையெடுத்துச் சென்று அணையை உடைத்து, காவிரி நீரை மீட்டு வந்தானாம்.

—கி. மணிவண்ணன்

---

அதனால் மேவு இல்லை, வயல்கள் காய்ந்து விட்டன என்று மக்கள் புகார் சொல்கிறார்கள் என்னுடன் வந்த பதினைந்து பேருக்கு இங்கே காய்ச்சல் வந்து விட்டது.

**27 அக்டோபர் 1800**

**கூடலூர்**

இன்று ஏழரை மலபார் மணி சென்று கூடலூர் அடைந்தேன். இங்கு ஒரு கடைகூட இல்லை.

அடுத்து கோயம்புத்தூர் செல்கிறார். சுமார் 170 ஆண்டுகட்கு முன் கோவை எப்படி இருந்தது? அடுத்த இதழில் காண்க

---

# வாழ்த்துகின்றனர்

**அன்புடையீர்,**

கொங்கு மூன்று இதழ்களையும் பார்த்தேன், நன்றாக உள்ளன, உங்கள் முயற்சிக்கு வாழ்த்து.

அன்பன்
**மு. அருணசலம், மாயூரம்**
(ஆசிரியர்: இலக்கிய வரலாறு)

---

**அன்புடையீர்,**

தாம் அன்புடன் அனுப்பி வைத்த கொங்கு இதழ்கள் படித்து மிகவும் மகிழ்ந்தேன். கொங்கு நாட்டில் மறைந்து கிடைக்கும் வரலாறு, வரலாற்றுப் பாடல், கல்வெட்டு ஆகியவைகள் முற்றும் வெளிவருதற்குக் கொங்கு வளர்ச்சியடையுமாறு திருவருளைச் சிந்திக்கிறேன்.

இங்ஙனம்
**வே. ரா. தெய்வசிகாமணி**
எழுமாத்தூர்.

---

**அன்புடையீர்,**

கொங்கு போன்ற இதழ்கள்தான் இன்றைய தமிழுலகத்தின் தேவை இத்தேவையை உணர்ந்து நல்ல முறையில் கொங்கு பணியாற்ற வேண்டும் என்று உளமார வாழ்த்துகிறேன்.

**ப. சண்முகம்**
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்.

# ஆர்நாட்டாமலே

புலவர் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்

## 1. அமைவிடம்

திருச்சி மாவட்டத்தில், கரூர் வட்டத்தில், காவிரியின் தென் கரையில் உள்ளது, ஆர்நாட்டாமலே என்னும் கருங்கல்மலேஆகும். அதன் அடிவாரத்தில் உள்ள ஊர் வேலாயுதம்பாளேயம் எனப்படு கிறது. புகளூர் ரயில்நிலேயத்திலிருந்து ஒன்றரைமைல் தொலேவில் உள்ளது. புகழியூர், புகழிமலேஎன வழங்கப்பட்டதாகத் தெரிகிறது.

## 2. சேரர் கல்வெட்டு

வரலாற்றுச் சிறப்புடைய கல்வெட்டு ஒன்று இம்மலேயில் கண்டுபிடிக்கப்பட்டுப்பாதுகாக்கப்படுகிறது. சங்க இலக்கியங்களில் பதிற்றுப் பத்து என்னும் நூல், சேர அரசர்கள் பதின்மரைப் பற்றி ஆளுக்குப் பத்துப்பாட்டு வீதம் பத்துப்புலவர்களால் பாடப்பட்ட நூல். அவற்றில் ஏழாம் பத்தின் தலேவன் செல்வக் கடுங்கோ வாழி யாதன், எட்டாம் பத்தின் தலேவன் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, ஒன்பதாம் பத்தின் தலேவன்குடக்கோஇளஞ்சேரல் இரும்பொறை. இதில் கடைசி மன்னன் இளவரசுப் பட்டம் கட்டிக் கொண்டபொழுது ஆத்தூரைச் சேர்ந்த "செங்காயபன்" என்னும் சமணமுனிவர் தங்குவதற்காக மலேயின் நடுப்பகுதியில் இயற்கையாக அமைந்த குகையில் கல் படுக்கை அமைத்துக் கொடுக்கப்பட்டதை அக்கல்வெட்டு குறிப்பிடுகிறது, அதன் வாசகம் வருமாறு:

தா அமணன் யாற்றூர்

செங்காயபன் உறைய்

கோ ஆதன் செல்லிரும்பொறை மகன்

பெருங்கடுங்கோன் மகன் இளங்கடுங்கோ

இளங்கோ ஆக அறுத்த கல்

சங்ககாலத் தமிழ் எழுத்தில் எழுதப்பட்டுள்ளது. அவ்வகை எழுத்துக்கள் 'தமிளி' என்று அழைக்கப்படுகின்றன.

அங்கு பல படுக்கைகள் உள்ளன. ஒவ்வொரு படுக்கையிலும் பெயர்கள் செதுக்கப்பட்டுள்ளன. 'கருஊர் பொன் வாணிகன்" "நல்லியூர்" "பிட்டன் கொற்றன்" "கீரன் ஓரி" "அத்தி" "நாகன்" "இளங்கீரன்" முதலிய பெயர்கள் அவைகளில் உள்ளன.

---

*கட்டுரை ஆசிரியர் தமிழகப் புலவர் குழு உறுப்பினர் ஆவர்*

சங்க இலங்கியங்களில் காணப்படும் செய்திகளில் சேரர் வரலாறு இதனால் உறுதிப்படுகிறது. சேரர்களில் இரும்பொறை இனத்தினர் கரூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தது இதனால் உறுதிப்படுகிறது.

## 3. செப்பேடு

பாண்டிய மன்னர், அதியன் ஒருவனுடன் போர் செய்து வெற்றி கொண்டதாகக் கூறும் நெடுஞ்சடையன் தான சாசன மெய்க்கீர்த்தியில் புகழியூர் குறிக்கப்பகிறது.

மா இரும் பெரும்புனற் காவிரி வடகரை
ஆ இர வேலி அயிரூர் தன்னிலும்
புகழியூரும் திகழ்வே லதியனை
ஒடு புறங் கண்டவன்

என்பது மெய்க்கீர்த்தியில் ஒரு பகுதி-

## 4. மேகபாலீச்சுர முடையார்

இவ்வூரில் வயல்களின் நடுவில் மேற்கு நோக்கிய சிவாலயம் ஒன்று கிலமான நிலையில் உள்ளது "மேகபாலீச்சரமுடையார்" என்பது ஆண்டவன் பெயர். அங்குள்ள கல்வெட்டுக்கள் மிகவும் சிதைந்துள்ளது "தென் கிழங்கு நாட்டுப் புகழியூர்" என ஊர் பெயர் எழுதப்பட்டுள்ளது.

இச்சிவ பெருமானைப் பற்றி ஏட்டுச் சுவடியில் உள்ள தனிப் பாடல் ஒன்று சுவையானது.

பேச்சிலே தப்பிலிமுக் குணத்திலே யொட்டனென்றும்
பிறவாத் தொண்டன்
வீச்சிலே மீன்விழுங்கி விழிப்பரம்ப னென்றுமிக
மெய்வெண் ணீற்றின்
பூச்சிலே பித்தனென்றும் புகழியூர்ப் பெருமானே
புலவோ ரும்மை
யேச்சிலே யேசமிக வேக்கமுற்று நட்டாற்றி
விரங்கி வீரே

## 5. வேலவன்

மலைமீது வேலவனுக்குரிய ஆலயம் ஒன்றுள்ளது. ஆண்டு தோறும் திருவிழாவும், நாள்தோறும் வழிபாடும் சிறப்பாக நடந்து வருகிறது. மலைமீது, மழை நீர் தேங்கி நிற்கும் பாளி ஒன்றுள்ளது. கோயிலுக்கு மகாமண்டபம் கட்டுவித்த 'தயிலம் மாள்' 'வயிரம்மாள்' என்ற இருபெண்களின் உருவச் சிலைகள் செதுக்கப்பட்டுப் பெயரும் பொறிக்கப் பட்டுள்ளது.

புகளூர் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியில் "கோப்பரகேசரி" என்று தொடங்கும் கல்வெட்டு ஒன்றை அப்பள்ளித் தமிழாசிரியர் 'செங்கைப் பொதுவன்' என்பவர் காட்டினார். அருணகிரிநாதர் புகழிமலை வேலவனைப் பாடியுள்ளார். காங்கயம் அட்டாவ தானம் சேசாச்சலக் கவிராயர் என்பவர் பாடிய புகழிமலைப்பதிகம் இலக்கியச் சுவையுடையது.

## 6. பெயர்க் காரணம்

ஆர்நாட்டாமலை எனப்பெயர் வந்த காரணம் தெளிவாகப் புலப்படவில்லை. அம்மலையின் மேற்கு அடிவாரத்திலிருந்து திருக்காடுதுறை என்னும் சிற்றூரின் எல்லை தொடங்குகிறது, திருக்காடுதுறை அரையநாட்டைச் சேர்ந்ததாகும். அதனுவ்

---

### AIR HOSTESS

*விமானப் பயணத்தின் போது பயணிகளுக்கு உதவி செய் வதற்காக அமர்த்தப் பட்ட இளம்பெண்கள் Air Hostess எனப் படுகின்றனர். பயணிகளை, விருந்தாளிகளைப் போல வரவேற்று உபசரிப்பது பணியின் சிறப்பு. ஆங்கிலத்தில் Hostess என்ற சொல் அதை நன்றாகக் குறிப்பிடுகிறது.*

*தமிழில் "விமானப் பணிப்பெண்" என்று வழங்கி வருகிறார்கள், Hostess-சை, பணிப்பெண் ஆக்குவது நன்றாக இல்லை, பதிலாக Air Hostess என்ற சொல்லுக்கு "வான்மகள்" என்ற சொல்லைப் பயன் படுத்தலாம்.*

---

அரையநாட்டு மலை என்ற பெயர்இருந்து அதுஆர்நாட்டாமலை என மாறியிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

## 7. ஆசிரியர்கள் பணி:

இளந்தலை முறையைச் சேர்ந்த ஆசிரியர்கள், தங்கள் மாண வர்களை ஆர்வத்தோடு இட்டுச் சென்று, கல்வெட்டுக்களைக் காட்டி, வரலாற்றில் அவர்களுக்கு ஆர்வத்தை ஊட்டவேண்டும் கற்படுக்கைகளில் காணப்படும். ஊர்ப் பெயர்களையும், மக்கட் பெயர்களையும் பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டும். இதனுல் சங்க இலக்கியச் செய்திகள் பல விளக்கம் பெற வாய்ப்புண்டு. பொதுமக்கள் வேலவனின் தாள் பணிவதோடு, பழைமைக் கல்லெழுத்துக்களுக்கு யாராலும், எத்தீங்கும் நேராமல் காப் பதிலும் கவனம் செலுத்த வேண்டும். *

---

## தமிழாசிரியர் கருத்தரங்கு

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் தனது மூன்றும் கருத்தரங்கை 12, 13. 6. 71 நாட்களில் அண்ணுமலை நகரில் சிறப்பாக நடத்தியது. இருநூற்றுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் வாசிக்கப் பட்டன, 'கொங்கில், மின்னியல் கட்டுரைகள் வழங்கிய **Er. இரா. கணேசன் அவர்கள்** 'அறிவுத் தமிழ்' பகுதியில் 'அறிவியலும், கலையியலும்' என்ற கட்டுரை வாசித்தார். **Er. கொடுமுடி. ச. சண்முகன் அவர்கள்** வரலாற்றுப் பகுதியில் "குறும்பொறை மன்னன் கொடுமுடி" பற்றி ஆய்வுக் கட்டுரை படித்தார் **திரு. தெ. பொ. மீ. அவர்கள்** முன்னிலையில், **திரு. இரா. நாகசாமி** அவர்கள் தலைமையில் வரலாற்றுப் பகுதி கூடியது கொங்கு ஆசிரியர் புலவர் **செ. இராசு அவர்கள்** "பவணந்தி முனிவர்" பற்றிய கட்டுரை வாசித்தார். மாநாடு மிகச் சிறப்பாக நடைபெற்றது போற்றத் தக்கது.

---

குழந்தை மருத்துவம்

# வருமுன் காப்போம்

டாக்டர். சி. ஆர். தம்பித்துரை

மருத்துவ மனையிலிருந்து வந்ததும் ஓய்வாக சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டிருந்தேன். மகிழ்ச்சி நிறைந்த முகத்தோடு பக்கத்து வீட்டு' சாம்பசிவம் வந்தார். அவர் மனைவி ஆண் குழந்தை பெற்றிருப்பதாக பிற்பகல் தந்தி வந்ததாம். வந்தவர் கல்கண்டு தந்தார்.

எதிர் வீட்டுத் திண்ணையில் ஒரு மாணவன் திருக்குறள் படித்துக் கொண்டிருந்தான். "வருமுன்னர் காவாதான் வாழ்க்கை" என்ற குறளைத் திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டிருந்தான்.

அதைக் கேட்ட சாம்பசிவத்திற்கு நான் முன்பொருமுறை தடுப்பூசி பற்றி சொன்னது நினைவிற்கு வந்து விட்டது, விளக்கம் கேட்டார்.

"என்ன, டாக்டர்! முந்தி ஒருதடவை குழந்தைகளுக்குத் தடுப்பூசி போடறதைப் பற்றிச் சொன்னீங்களே, நினைவிருக்கா? பச்சை உடம்பிலே ஊசி போட்டாத் தாங்குமா? '' என்றார்.

" பச்சையாவது! சிகப்பாவது! இந்த குழந்தைப் பருவத்திலே வரக்கூடிய வியாதிகள் பலவற்றை தடுக்குறதுக்குத்தான் இந்த தடுப்பு ஊசி போடறது. அதாவது பெரியம்மை (Smallpox) கக்குவான் (Whooping cough) இளம்பிள்ளைவாதம் (polio) தொண்டை அடைப்பான் (Diphtheria) காசநோய் (Tuberculosis) வாய்பூட்டுநோய் (Tetanus) போன்ற கொடிய வியாதிகளைத் தடுக்கிறதுக்குதான் இந்த தடுப்பூசிகள் (Vaccination) போடறது. அதுலே முக்கியமாத் தெரிஞ்சுக்க வேண்டியது என்னென்னு இங்கே மேலே குறிப்பிட்ட பல வியாதிகள் வந்த பிறகு மருத்துவர்கள் செய்ய கூடியது, தற்சமயத்திற்கு வெகு குறைவுதான், ஆகவே வராம தடுக்கிறது தான் முக்கியம்'' என்றேன். கொஞ்சம் விளக்கமாகச் சொல்லச் சொன்னார் சாம்பசிவம்.

"இந்த தடுப்பு ஊசிகளெல்லாம். ஒரு தத்துவத்தை அடிப் படையாகக் கொண்டு அமைக்கப் பட்டவை. அதாவது நமது உடலில் நோய்க்கிருமிகள் புகும் பொழுது, அவற்றிற்கெதிராக இயற்கையாகவே நம்ப உடம்பில் நோய் எதிர் அணுக்கள் (Antibodies) உண்டாக்கப் படுகின்றன. இவ்வணுக்கள் எந்த நோய்கிருமிக்கு எதிராக உண்டாக்கப் பட்டனவோ அவற்றை மட்டுமே எதிர்க்கும் சக்தி பெற்றவை.

"இது மட்டுமில்லாமல் மற்றொரு முக்கியமானதும் நீங்க புரிஞ்சுக்கணும். அதாவது, நோய்க்கிருமிகள் சில சமயங்களிலே நோயுண்டாக்கும் வீரியத்தை (Attenuated) இழநதாலும் எதிரணுக் கள் உண்டாக்கும் சக்தியை இழப்பதில்லே. உதாரணமா சொல்லப் போனா, நோய்க்கிருமிகள் முதலிலே பீனுல் (Phenol) போன்ற திரவங்களைக் கொண்டோ அல்லது உஷ்ணத்தின் மூலமோ மருத்துவர்கள் கொன்றுவிடுகிறார்கள். இந்த கொல்லப்பட்ட நோய்க்கிருமிகளை உடலில் செலுத்தினுல் அவை நோயையுண்டாக் காமல் எதிரணுக்களை மட்டும் உண்டாக்கும் தன்மைகொண்டவை.

"இந்த தத்துவத்தை மூலமாகக் கொண்டு மருத்துவர்கள், முதலில் சில நூதனமான முறைகளைக் கொண்டு கிருமிகளின் நோயுண்டாக்கும் வீரியத்தை இழக்கச் செய்து, பின்னர் அதே கிருமிகளை தடுப்பு ஊசிகள் மூலம் உடல்லே செலுத்தராங்க. இத்தகைய தடுப்பு உசி அளிக்கப்பட்டவரின் உடலில் வீரியமுள்ள நோய்க்கிருமிகள் புகுந்தவுடன் அதற்கெதிரான அணுக்கள் விரைவில் உண்டாக்கப்பட்டு விடும். ஆக நோய்க் கிருமிகள் உடலில் பெருகுவதற்கு முன்னுல் எதிரணுக்கள் அவற்றை அழித்துவிடும் இவ்வாறு உண்டாக்கப்படும் நோய் எதிர்ப்பு சக்திக்கு (Active Immunity) என்று பெயர். ஆக மருத்துவர்கள் ஒன்றன்பின் ஒன்ருக மேலே குறிப்பிட்ட வியாதி ளுக்கு தடுப்பு ஊசிகளை கண்டுபிடிச்சு பயன்படுத்திக்கிட்டு வருகி ருர்கள். காசநோய்க் கெதிரான தடுப்பு ஊசிக்கு பி. ஸி. ஜீ. (B. C. G.) என்றும், பெரியம்மைக் கெதிரான ஊசிக்கு 'வேக்சினியா' (Vaccinia) என்று பெயர்." என்று கூறி நிறுத்தினேன்.

"இப்பொழுதானே புரிகிறது! ஏன் சார் இந்த தடுப்பு ஊசிகளை எவ்வப் பொழுது போட வேண்டும்" என்று கேட்டார் சாம்பசிவம் ஆர்வத்துடன்.

''எவ்வளவுக் கெவ்வளவு விரைவில் செய்கிறேமோ அவ்வளச் கவ்வளவு நல்லது, ஆனல் பொதுவாக மருத்துவர்கள், கீழ்க்கண்ட முறையை இப்போது மருத்துவ மனைகளில் பயன்படுத்துகிறார்கள். காசநோய்க் கெதிரான பி. சி. ஜீ. தடுப்பு ஊசி குழந்தை பிறந்த முதல் நாளே இப்போது கொடுக்கப்படுகிறது. பெரியம்மைக்கான முதல் தடுப்பு ஊசி (Primary Vacination) மூன்றும் நாள் தரப் படுகிறது.

''தொண்டை அடைப்பான் (Diphtheria) கக்குவான் (whooping Cough) வாய்ப்பூட்டு நோய் (Tetanus) இவை மூன்றுக், குமான தடுப்பு மருந்துகள் ஒன்ருக தரப்படுகின்றன. இதற்கு (Triple vaccine) எனப்பெயர். இதை மூன்று தவணைகளில் கொடுக்கிறார்கள், முதல் அளவினை மூன்றும் மாதத்தில் ஆரம்பித்து, சுமார் ஒரு மாத இடைவெளிக்குப் பின்னர் அதாவது நான்காம் மாதத்தில் இரண்டாவது அளவினையும், ஆறு மாத இடைவெளிக்குப் பிறகு மூன்றும் அளவையும் தருகிறார்கள். இதற்குப் பின்னர் குழந்தைக்கு ஐந்து வயதாகும் போது 'Booster dose' எனப்படும் 'உந்து அளவைத் தருகிறார்கள்'' எனக் கூறிவிட்டு, ''இன்னும் என்ன சொல்லவேண்டும்'' என்று கேட் பதைப் போல் சாம்பசிவத்தை நோக்கினேன்.

''இளம்பிள்ளை வாதம் பற்றிச் சொல்ல வில்லையே!'' என்று எனக்கு நினைப்பூட்டினார் அவர்.

''இளம்பிள்ளை வாதத்துக்கான தடுப்பு மருந்து வாய்மூலம் உட் கொள்ளும் வடிவத்தில் கிடைக்கின்றது. இதற்கு 'Sabinvaccine' எனப்பெயர். இதையும் மூன்று தவணைகளில் முன்னே குறிப் பிட்டதைப் போலவே அதே மாதங்களில் எடுத்துக் கொள்ள லாம்'' என்றேன்.

---

## மது

தமிழ் நாடு அரசு மது விலக்கை ஒத்திவைத்துள்ளது. ஒரு தலைமுறையாகக் காணமுடியாத பல அரிய காட்சிகளை இனி இலவசமாக எல்லாத் தெருக்களிலும் காணலாம். ஔவையார் அதிகமானிடம் சென்ற போதெல்லாம் அருமையான கள் கொடுத்து உபசரிப்பானும். 'கள் கொஞ்சமாக இருக்கும் போது, அதை எனக்குத் தந்துவிடும் பெருந்தகை' என்று ஔவையார் பாடுகிறார். 'சிறிய கள் பெறினே எனக்கீயும் மே' என்கிறார். கள்ளின் தீமையை உணர்ந்து ஒதுக்கியவர் வள்ளுவர்தான். ஆக, நாம் சங்க காலத்திற்குச் சென்று கொண்டிருக்கிறோம்; மீண்டும் ஒரு திருவள்ளுவர் பிறக்க எல்லா வாய்ப்புகளும் உள்ளது கண்டு நாமும் மகிழ்வோம்.

---

“ஒரே ஒரு சந்தேகம்! இந்த தடுப்பு ஊசிகளை எப்பொழுது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாமா? அல்லது ஏதாவது முன்னெச்செரிக்கைகள் எடுத்துக் கொள்ள வேண்டுமா?”

“நீங்கள் கேட்டது நல்ல கேள்விதான்! ஆனால் இதற்கு பதிலோ மிகப்பெரியது மட்டுமல்ல, சில உங்களுக்கு புரிவதும் கடினம், இருந்தாலும் ஒன்றிரண்டு சொல்கிறேன். உதாரணமா, பெரியம்மை தடுப்பு ஊசிகளை சருமக் கோளாறுகள் உள்ளன சமயத்தில் கொடுப்பது கிடையாது. இளம்பிள்ளை வாதத்துக் கான தடுப்பு மருந்தினை வயிற்றுப் போக்கு (diarrhoea) சளி, (cold) உள்ள நேரங்களில் கொடுப்பதில்லை. இவை யன்றி இன்னும் பலவித முன்னெச்சரிக்கைகள் இருக்கின்றன. அவை தனிப்பட்ட நபருக்கேற்றபடியோ அல்லது காலத்திற் கேற்ற படியோ வேறுபடலாம். ஆக, இது பற்றி சரியான முடி வெடுக்கும் பொறுப்பு மருத்துவரையே சார்ந்தது. உதாரணமாக, பெரியம்மை, ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் பெருவாரியாக உண்டாகும் பொழுது (Small pox epidemic) முன்னெச்செரிக் கைகள், எதுவும் எடுத்துக் கொள்வதில்லை. அனைவருக்கும் தடுப்பு ஊசிகள் கொடுக்கப் படுகின்றன”.

“அப்படியானால் தடுப்பு ஊசி. போடுவதற்கு கென்று இரண்டு மூன்றாண்டுகளுக் கொருமுறை நகராட்சி ஊழியர்கள் வராங்களே! எதுக்கு?” என்றார்.

“அடடா! அதைக் கூறமறந்து விட்டேன். பிறந்தவுடன் பெரியம்மைக் கெதிராக போடப்படும் தடுப்பு ஊசிக்கு “primary vaccination. எனக்கூறுவர். அதன் பின்னர், மூன்றி லிருந்து ஐந்தாண்டுகளுக் கொருமுறை (3-5years) மறுபடியும் பெரியம்மைத் தடுப்பு ஊசி போட்டுக் கொள்ள வேண்டும் அதற்கு “மறு தடுப்பு ஊசி” (Re-vaccination) என்று பெயர் இது மட்டு மின்றி, பெரியம்மை சுற்று வட்டத்தில் பெருமளவில் தோன்றும் பொழுதெல்லாம் கட்டாயம் மறு தடுப்பு ஊசி எடுத்துக் கொண்டாக வேண்டும்” எனக்கூறி முடித்தேன்.

“ரொம்ப சந்தோசம் சார்! தடுப்பு ஊசிகளின் முக்கியமும் அவசியமும் நல்லாப் புரியுது. ஊருக்குப் போனதும் என் குழந் தைக்கு தடுப்பு ஊசி போட்டுக்குறதுதான் எனது முதல்வேலை” என்ற படியே எழுந்தார் சாம்பசிவம். எதிர் வீட்டுப் பையன் இன்னும் அந்தக் குறளை விடவில்லை. அவன் குரல் கேட்டது.

வருமுன்னர் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போல கெடும்.

# சிவஞானம் என்னும் தமிழ்ஞானம்

கல்விக்குத் தடை இல்லை; கற்றனைத்தும் ஊறும்; என்பது ஆன்றோர் வாக்கு. அதற்கு இலக்கணமாக அமைந்தவர் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்கள். கல்லூரியைக் காணுமலே கல்வியில் சிறந்தவரானுர். தமிழ் இலக்கியங்களை ஆர்வத்தாலே பயின்று ''தமிழ்ஞானம்'' ஆனுர். அவருக்கு கடந்த திங்களில் 66-வது பிறந்த நாள் வந்தது. அவரை வாழ்த்துவதில் பெருமையடைகிறோம்.

சென்ற கொங்கு இதழில் அவருடைய வாழ்த்துச் செய்தி இடம் பெற்றிருந்தது. அதில் அவர் கூறிய கருத்து ஒன்று விவாதத்தைத் தூண்டிவிட்டுள்ளது. ''கல்வெட்டில் பொறிக்கப்பட்டவை யெல்லாம் ஐயத்திற்கிட மற்ற வரலாற்று உண்மைகள் என்று நம்புவதற்கில்லை, மன்னர்களின் மதவாதிகளின் ஒருதலைப்பட்ட கருத்துக்களே கல்வெட்டுக்களில் பெரும்பாலும் காணப்படுகின்றன. ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப் பின்னரே இதைக் கூறுகிறேன்.'' என்பது அசல் வாசகம். ஆராய்ச்சி என்பதால் மாற்றுக் கருத்துக்களைச் சொல்வதில் தவறில்லை. ஐயா அவர்களும் தவருக எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.

கல்வெட்டுக்களில் ஒரு சிலவே, மிகமிகக் கொஞ்சமானவையே மதவாதிகள் வெட்டி வைத்தவை. பெரும்பாலானவை அரசாணைகள் (govt orders); ஒப்பந்தங்கள்; பதிவு செய்யப்பட்ட ஆவணங்கள். சில செய்திக் குறிப்புகள்.

அரச்சலூர் இசை எழுத்துக்களை புணர்த்தவன் இன்னுர் என்று கூறுவது செய்திக் குறிப்பு. புகழியூர் மலையில் உள்ள கல்வெட்டு கொடை பற்றிய குறிப்பு. உத்தரமேரூர் ஊராட்சி முறை பற்றிய கல்வெட்டு நடைமுறைச் செய்தியைக் கூறுவது. தஞ்சை இராசராசேச்சுரத்தில் அரசன் தானம் தந்த ஆணைகள் உள்ளன. அவ்வப்போதைய சட்டங்களும் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன. இவைகளில் மதவாதிகளின் கறை படியவில்லை.

இவற்றுள் இன்ன காலத்தில் அளிக்கப்பட்டது எனக் கூறும் போது, அவ்வப் போதைய மன்னர்களின் ஆட்சி ஆண்டிலிருந்தே கணக்கிடப்பட்டன. முக்கியமாக இந்தக் குறிப்பே கால ஆராய்ச்சிக்குப் பயன்படுகின்றன. மற்ற செய்திகள் அவ்வக்கால சமுதாயப் பழக்க வழக்கங்களில் சிலவற்றை எடுத்துக் காட்டுகின்றன.

பெரும்பாலான கல்வெட்டுகள் அவ்வப் போதைய நிகழ்ச்சிகளை அப்பொழுதேயே எழுதப்பட்டவையாய் அமைகின்றன.

இவற்றை ஓரளவு நம்பலாம். ஒரு சில, நிகழ்ச்சி நடந்து பல ஆண்டுகளுக்குப் பின் செவிவழிச் செய்திகளைக் கொண்டு பொறிக்கப்பட்டவையாக இருக்கும். சிலப்பதிகாரத்திலேயே சொல்லப் பட்ட மனு நீதிச் சோழனின் கதையைப் பெரியபுராணத்திற்குப் பின்னர் வந்தவர்கள் பொறித்து வைத்தது போன்றவை. இவற்றை நம்ப கூடாது.

இது போன்ற ஒன்றிரண்டு தவறான கல்வெட்டுக்களைப் பெரிது படுத்தி, எல்லாக் கல்வெட்டுக்களையும் தவறு என்று தள்ளிவிட்டால், தமிழ் நாட்டிற்கு வரலாறே இல்லாமல் போய் விடும். காலங்கள் தோறும், சங்கலித் தொடர் போல அவ்வப் போதைய மன்னர்களின் ஆட்சியாண்டு மூலமாக வரலாற்றுச் செய்திகளைத் தொடர்ந்து தரும் கல்வெட்டுக்கள் நிறைந்த இடம் உலகத்திலேயே தமிழ் நாடு ஒன்றுதான்.

கல்வெட்டுக்கள் பிழை மலிந்தவை தான். அவற்றிலிருந்து துள்ளித் தெரித்து வரும் ஓரிரு வரலாற்றுச் செய்திகளை அள்ளித் தொகுத்துத்தான் தமிழக வரலாறு என்னும் மாலையை முழுது மாகப் பின்னவேண்டிய நிலையிலுள்ளோம்.

—செந்தில்

---

பாடல் கல்வெட்டு (4)

# ஆனூர்

தாராபுரம் வட்டத்தில் நொய்யலாற்றின் கரையின் மீது பழயகோட்டைக்கு அருகில் உள்ளது ஆனூர். ''ஆனூரம்மன் கோயில்'' சிற்பங்கள் கொண்ட சிறந்த ஆலயம். கோயிலைக் கட்டுவித்தவர் ஏழாவது பட்டக்காரரான அழகன் சர்க்கரை உத்தம காமிண்ட மன்றாடியார் அவர்கள். அக்கோயிலில் வேலை செய்த சிற்பி சோமசுந்தரன், மன்றாடியர் இட்ட தயிர்ச் சோற்றிலும் அடைக்காவிலும் தன் நெஞ்சைப் பறிகொடுத்த தால்அந்நன்றிப் பெருக்கு பாட்டாக உருவெடுத்துக் கல்லிலும் ஏறி விட்டது.

*உயரு புகழ் ஆனூர்வாழ் உத்தமி மண்டபம் கட்ட*
*உவந்து வந்து*
*பயிர குலப் பெரியோர்கள் பணம் மட்டும் தான்*
*கொடுத்தார் பணியாளர்க்கு*
*வயிறுநிறை யச்சோறும் வாய்க்கு வெற்றிலைபாக்கும்*
*வாங்கித் தந்து*
*தயிரொடு மு வேளையிட்ட தர்மமிது அழகன் சர்க்*
*கரைய தாமே.*

பாடியவன் முன் மண்டபம் வேலை செய்த சிற்பி சோமசுந்தரன் என்ற குறிப்பு அடியில் காணப்படுகிறது.

புலவர்- செ. இராசு

# மேல்கரை அரைய நாடு

கொங்கு மண்டலத்தில் 24 நாடுகளில் அரைய நாடு ஒன்றாகும். இது காவேரியின் இரண்டு கரையிலும் பரவி மேல் கரை அரைய நாடு, என்றும் கீழ்கரை அரைய நாடு என்றும் பேர் கொண்டுள்ளது.

## மேல்கரை அரைய நாடு

| | |
|---|---|
| தலைய நல்லூர் | எழுநூற்று மங்கலம் |
| வெங்கம்பூர் | இளவரச நல்லூர் |
| அஞ்சூர் | வல்லிபுரம் |
| மொஞ்சனூர் | கார்வளி |
| கொல்லங்கோயில் | துக்காச்சி |
| கொந்தளம் | வடிவுடைய மங்கலம் |
| கொடுமுடி | ஊஞ்சலூர் |
| அத்திப் பாளையம் (விதரிமந்தை) | திருக்காடு துறை |

கரூர் ஈரோடு வட்டங்களில் பரவி உள்ளது. கிழக்கெல்லை திருக்காடு துறையின் எல்லையில் உள்ள ஆர்நாட்டாமலை ஆகும்.

சிவகிரியில் ஒரு நடுகல் உள்ளது. "பெரிய கிழங்கன் மகன் கிழங்கன்" என்று எழுதப்பட்டுள்ளது. புலவர் இராசு அவர்கள் இதைக் கண்டு வெளியிட்டுள்ளார்.

வடிவுள்ள மங்கலத்தில் ஈழமும், கடாரமும் கொண்ட ராசேந்திர சோழன் காலத்துக் கல்வெட்டும் நடுகல்லும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. புலவர் இராசுவின் தகவலின் மேல், தமிழ் நாடு அரசின் ஆண்டறிக்கை "தமிழகத்திலும்" வெளியாகி யுள்ளது. அழகன் காளி என்பது இங்குள்ள நடுகல் தலைவனின் பெயர்.

அகநானூறு 159 ஆம் பாடலில் கூறப்படும் குறும் பொறை மன்னன் கொடுமுடியின் பெயரால் அமைந்த ஊர் திருபாண்டிக் கொடுமுடி ஆகும். இவ்வூர் ஆண்டவனுக்கு, இந்நாட்டில் பாதியான எட்டு ஊர்களைத் தானமாக அளித்து "நாடெட்டுத் தானமெட்டு" எனப் பேர் உண்டாகியுள்ளது. இவ்வெட்டு ஊர்களின் உரிமைக்கும் தட்டய நாட்டிலிருந்து எட்டு குயவர் குடியினரை கொண்டு வந்து குடியமர்த்தி கோயில் கிராம சாந்தி உரிமை வழங்கியுள்ளதை இன்றும் அறியலாம்.

மொத்தத்தில் வரலாற்றுச் செறிவுகள் நிறைந்தது இப் பகுதியாகும். நொய்யலாற்றின் கழிமுகம் இந்நாட்டிலேயே அமைந்துள்ளது.

—கொடியன்